அந்த ஜட ப்ரபஞ்சத்தை இந்த ஜீவ லோகத்தோடு கோடி தினுஸில் முடிச்சுப் போட்டு ஜீவ யாத்ரை நடப்பதைப் பார்த்தாலும் இதையெல்லாம் நடத்து விக்கிற ஒரு பேரறிவு இருந்தே தீர வேண்டும், அதுதான் இன்ன கார்யத்திற்கு இன்ன பலன் என்று திட்டம் பண்ணி நடத்துகிறது என்று ஒப்புக்கொள்ள வேண்டியே ஏற்படும். அந்தப் பேரறிவைத்தான் ஸ்வாமி என்பது. சித்த சுத்திக்காகவே கார்யமே தவிர, இந்தக் கார்யத்தினாலேயே கிடைக்கும் பலனுக்காக இல்லை என்னும்போது, 'அப்பா, இந்தப் பலனை உன் பாதத் தில் அர்ப்பணம் பண்ணிவிட்டேன். எனக்குச் சித்த சுத்தியைத் தா' என்று அவனிடம்தான் பலத்யாகம் பண்ண வேண்டும்.

'அவன் அத்வைதமான ஞானத்தை அனுக்ரஹிக்கும் வரையில் அவனிடம் அன்போடு பக்தி பண்ணிக்கொண்டு இப்படிக் கர்மபல த்யாகம் செய்துவர வேண்டும். அப்புறம் அவனாகவே ஆகிவிடலாம். பக்தி என்கிற இந்த அன்புக் கும் மீமாம்ஸையில் இடமே இல்லாமலிருப்பது ஒரு பெரிய குறை. இந்த அன்பின் அம்சமாக லோகத்திலுள்ள பல தினுஸான நல்ல அன்புகள் எதற்கும் அதில் இடமில்லை. ஒரு ஜீவன் என்றால் அவன் உடம்பால் செய்யும் கார்யம், மனஸால் செய்யும் அன்பு, மனஸும் கழன்று போய் அப்படியே ஆத்மாவாக உள்ள சாந்தி நிலை என்று எல்லாமும் சேரும்படி, ஒன்றுக்கொன்று கைகொடுத்துப் போகும்படி வழி சொன்னால்தானே integrated personality (ஒருங்கு சேர்ந்த ஜீவ பூர்ணம்) உருவாக முடியும்? மனஸின் அன்பும் இல்லை, ஆத்மாவின் சாந்தியும் இல்லை, வறட்டு வறட்டு என்று உடம்பால் கார்யம் பண்ணிக் கொண்டிருந்தால் போதும் என்றால் எப்படி ஒரு ஜீவனுக்கு நிறைவு கிடைக்கும்?

'கர்மம், பக்தி இரண்டையும் கலந்து ஈச்வரனுக்காகப் பண்ண வேண்டி யதையெல்லாம் பண்ண வேண்டும். அவனுடைய ஸ்வரூபமாகவே லோகத்தையெல்லாம் பார்த்து அதற்கானதையெல்லாமும் பண்ணவேண்டும். கடைசியில் இதெல்லாமும், 'அவனுக்கானது, அவர்களுக்கானது' என்பதை விட 'நமக்கேயானதுதான்' என்கிற மாதிரி நமக்கே ஞான நிஷ்டைக்கு ஏறு வதற்கான யோக்யதை ஸித்திக்கும். அப்போது எல்லாவற்றையும் நிறுத்தி விட்டு, கார்யமெல்லாம் போச்சு, மனசும் போச்சு என்று அப்படியே ஆத்மாவாக இருந்துகொண்டிருப்பதற்கான ஸாதனைகளை ஆரம்பிக்க வேண் டும். ஸாதனை பண்ணி முடிவில் அப்படி ஆகிவிட வேண்டும். அப்போது தான் ஜன்மா இல்லை, ஸம்ஸார பந்தமில்லை என்று சாச்வதமாக விடுதலை பெற முடியும். ஏனென்றால் ஜன்மம், பந்தம் எல்லாம் சரீரமும், மனஸும் உள்ளவரைதானே ஸாத்தியம்? ரூபமுமில்லை, எண்ணமுமில்லை என்றால் எதற்குக் கர்மா, கர்ம பலன் ஆகியவற்றைக் கொடுத்து ஜன்மா உண்டாக்கி, ஸம்ஸாரத்தில் பந்தப்படுத்த முடியும்? அந்தச் சாச்வத சாந்தம் வேண்டாம், ஸதா கார்யங்களில்தான் சிக்கிக்கொண்டு ஏதாவது சஞ்சலப் பட்டுக் கொண் டிருப்பது என்றால் ஸரியா?

'மா தே ஸங்கோஸ்த்வகர்மணி – கார்யம் செய்யாமலிருப்பதில் உனக்குப் பற்று வேண்டாம்; அதாவது கார்யம் பண்ணிக் கொண்டேயிரு' என்று பகவான் சொல்லவில்லையா என்றால், இது ஆரம்பக் கட்டத்தில் இருக்கும் ஸாதகனுக்கே சொன்னது. இத்தனை காலமாக, ஜன்ம ஜன்மாவாக இந்த்ரிய போகங்களுக்காக இவன் ஓயாமல் கார்யம் பண்ணிக் கொண்டே இருந்தவன்.

திடீரென்று நிறுத்து என்றால் எப்படி முடியும்? 'கார்யத்தை விட்டுவிட்டு ஞானியாக, ஸன்னியாஸியாக இப்பவே நான் ஆகி விடுவேன் என்று நீ நினைத்தாலும் உன்னால் அப்படி முடியாது, அதற்கான சக்தி உனக்கு இல்லை; ந ஹி (தேஹப்ருதா) சக்யம் – தேஹாபிமானமுள்ள மட்டும் கார்யத்தை விடச் சக்தி இருக்காது: 'ந ஹி தேஹப்ருதா சக்யம் த்யக்தும் கர்மாண்ய சேஷத:' இந்த ஸ்டேஜிலேயே விடுவேனென்றால், உடம்பு கார்யம் பண்ணாவிட்டாலும் மனஸ் பழக்கப்பட்ட அந்த இந்த்ரிய போகக் கார்யங்களைப் பண்ணிப் பார்த்துக் கொண்டேதானிருக்குமேயொழிய, அடங்கி ப்ரசாந்தமாயிருக்காது. வெளியில் கார்யத்தை நிறுத்தின ஞானி மாதிரி இருந்து கொண்டு மனஸுக்குள்ளே இந்த்ரிய விஷயமானவற்றையே நினைத்துக் கொண்டிருப்பவன் மூடாத்மாதானே? மித்யாசாரன் என்கிற 'ஹிபாக்ரிட்'தானே? 'கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரந் ।இந்த்ரியார்த்தாந் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே ॥' அதனாலே, அப்பா அர்ஜுனா, இப்போது உன் நிலைமையிலே நீ ஏதோ ஒரு மோஹத்தில் (மதி மயக்கத்தில்) கார்யத்தை விடுவேன் என்றாலும் உன் இயற்கை குணம் உன்னைக் கட்டியிழுத்து, உன் வசமில்லாமலே உன்னைக் கார்யத்தில் தான் தள்ளும்: 'ஸ்வபாவஜேந கௌந்தேய நிபத்த: ஸ்வேந கர்மணா । கர்த்தும் நேச்சஸி யந்-மோஹாத் கரிஷ்யஸ்-யவ சோ(அ)பி தத் ॥' அதனால் தான் உன்னை இப்போது கார்யத்தை விட வேண்டாமென்றது. ஆனால் இப்படியே இஷ்டப்படிப் பண்ணாமல் சாஸ்த்ரப்படிப் பண்ணு என்கிறேன். பற்றோடு பண்ணுவதைவிட்டு, பற்றை விட்டு பகவதர்ப்பணம் பண்ணு என்கிறேன்: 'தத் குருஷ்வ மதர்ப்பணம்'. இப்படிப் பண்ணிக் கொண்டே போனாயானால் தாமரை இலைத் தண்ணீர் மாதிரிப் பாவம் உன்னைத் தொடாமலிருக்கும் நிலை வரும்: 'லிப்யதே ந ஸ பாபேந பத்ம-பத்ரமிவாம் பஸா.' இப்படி அவனவனுக்கும் சாஸ்த்ரோக்தமாக வாய்த்த கர்மாவை நிஷ்காம்யமாகப் பண்ணிப் பலனை ஈச்வரனுக்கு அர்ப்பித்தானானால் அப்புறம்தான் அவனுக்கு ஞான யோகத்தில் பிரவேசிக்கின்ற யோக்யதா ஸித்தி ஏற்படும்: ஸ்வகர்மணா தம் அப்யர்ச்ச ஸித்திம் விந்ததி மாநவ: । இது சின்ன ஸித்தி. இதற்கும் அப்புறம், கார்யத்தை விட்டுவிட்டு ஞான விசாரமே பண்ணிக் கொண்டு போகும்போதே சாச்வத மோக்ஷமான மஹா ஸித்தி – 'ஸித்திம் பரமாம்' என்பது – கிடைக்கும். 'நைஷ்கர்ம்ய ஸித்திம் பரமாம் ஸந்ந்யாஸே நாதிகச்சதி' । ஒரு கார்யமுமில்லாத நிலையே அந்தப் பரம ஸித்தி. அதை ஒருவன் ஸன்னியாஸியாக ஆகி அடைகிறான்' என்கிறார். ஆக, கார்யம் பண்ணாமல் மனஸை அடக்கி சாந்தமாக இருக்க மனுஷ்யர்களுக்குப் பக்வம் போதாததால்தான் சாஸ்த்ரோக்தமான ஸகல கார்யமும் பண்ணி அந்தப் பக்வத்தைப் பெறும்படி பகவான் சொன்னாரே தவிர அதுவேதான் முடிவு என்று சொல்லவேயில்லை. ஸாதனா மார்க்கத்தில் ஏற விரும்புகிற வனுக்கே கார்யம் உபாயமாகிறது. அவனே ஏறிவிட்ட பிறகு 'சமம்' என்பதாகக் கார்யங்களை ஒழித்துவிட்ட நிலைதான் மோக்ஷோபாயமாகிறது என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார்: 'ஆருருக்ஷோர் - முநேர் - யோகம் கர்ம காரணம் உச்யதே ।யோகாரூடஸ்ய தஸ்யைவ சம: காரணம் உச்யதே ॥'. 'ஸகல கர்மமும் ஞானத்தில் போய் அடங்கித்தான் பூர்த்தியடைகிறது: ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞாநே பரிஸமாப்யதே. ஞானிக்குக் கார்யம் கிடையவே கிடையாது: தஸ்ய கார்யம் ந வித்யதே' என்று தீர்மானமாக

முத்தாய்ப்பு வைத்துச் சொல்லி விட்டார்.★

கீதை கர்மயோகத்தை நிறையச் சொல்லியிருக்கிறதென்பதால் அதையே முடிவாகச் சொல்லியிருக்கிறதென்று அர்த்தமில்லை என்று ஆசார்யாள் தம்முடைய பாஷ்யத்தில் நன்றாகத் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

இதேபோல, ஆசார்யாளின் மதத்திற்கு ஆதாரமான உபநிஷத்துகளிலும் கூட எங்கேயாவது கர்ம மார்க்கத்தை வலியுறுத்திச் சொல்லியிருந்தால் அதுவேதான் பரம தாத்பர்யம் என்று நினைத்துவிடக் கூடாது என்றும் ஆசார்யாள் விளக்கி வைத்திருக்கிறார். 'ஈசாவாஸ்ய (உபநிஷ)'த்தில் மனுஷன் நூறு வயஸும் வைதிக கர்மா பண்ணிக் கொண்டிருக்கட்டும் என்று ஆரம் பத்தில் மந்த்ரம் இருக்கிறது. ஆனால் இங்கே 'ஜிஜீவிஷேத்' என்று போட்டு, 'லோக வாழ்க்கை வாழ ஆசைப்படுபவன் இப்படிப் பண்ணட்டும்' என்றே இருக்கிறது. அதாவது நிவ்ருத்தி மார்க்கத்தில் போகாமல் ப்ரவ்ருத்தியில் போகிறவனுக்கே இந்த உபதேசம். 'இஷ்டப்படிப் பண்ணாதே! சாஸ்த்ரப்படி ஸகலமும் பண்ணு' என்று அவனுக்குச் சொல்கிறது. இது ஆசார்யாளுக்கும் பூர்ண ஸம்மதம்தான். அடுத்த மந்த்ரத்திலேயே ஆத்மாவைத் தெரிந்து கொள் ளாதவன், அதாவது ஞான மார்க்கத்தில் போகாதவன் ஆத்மஹத்தி (தற்கொலை)யே செய்து கொண்டவன்தான் என்றும் வருகிறது. அப்புறம் ஒரே அத்வைதமாக ஆத்ம லக்ஷணத்தைச் சொல்லியிருக்கிறது. ஆகையால் வேதத்தில் கர்மாவைச் சொல்லியிருப்பது ஞானத்துக்குப் போவதற்குப் பூர்வாங்கமாகத்தான்.

இப்படியெல்லாம் ஆசார்யாள் குமாரிலபட்டருக்குத் தத்வங்களை எடுத்துச் சொல்லி உபதேசித்தார். ஒரேயடியாகக் கர்மா என்றே இருந்தவரின் மரண ஸமயத்தில் வந்து அவர் கர்மா தொடவே முடியாத சாந்தத்தில் சேரும் படியாக இப்படி உபதேசித்தார். அந்த சாந்தத்தின் அவதாரம்தான் ஆசார் யாள். அவதாரத்திலே அவர் கார்யமயமாகத்தான் ஸதாவும் தெரிந்து கொண் டிருந்தாலும் அப்போதும் அந்தரங்கத்தில் ஒன்றும் செய்யாத சாந்தத் தவமாகத்தான் இருந்து கொண்டிருந்தார். நிறையச் சொன்னேன்; – எவ்வளவுதான் சொன்னாலும், செய்தாலும் ஒன்றும் செய்யாமல் சும்மாயி ருப்பதுதான் முடிவு. அதைத் தெரிவிப்பதுதான் பெரிய உபகாரம் என்பதற் காகத்தான் அவர் அவதாரம் எடுத்திருந்தது!

ஆசார்யாள் அன்போடுகூட உபதேசிக்க உபதேசிக்க, கர்ம மார்க் கத்தையே முடிந்த முடிவாகப் பிடித்துக் கொண்டிருப்பது உபயோகமில்லை என்று குமாரிலபட்டருக்குப் புரிந்தது. ஈச்வர பக்தியில் போய் ஞானம் பெற்று ஆத்மாவைத் தெரிந்து கொண்டாலன்றி சாச்வதமான சாந்தி ஸௌக்யங்கள் இல்லை என்று புரிந்து கொண்டார்.

ஆசார்ய தர்சனமும், உபதேசமும் உமிக்காந்தல் அக்னியின் தஹிப்பை அடியோடு போக்கிவிட்டன. அப்பர் ஸ்வாமிகளைச் சுண்ணாம்புக் காள வாயில் போட்ட போதும் அவர் சிவ ஸ்மரணையிலேயே ஈடுபட்டிருந்ததால் **'ஈசன் எந்தை இணையடி நீழலில்'** தாம் ஜில்லென்று இன்பமாக இருந்த

★ இப் பாராவில் குறிப்பிடப் பெறும் கீதை ச்லோகங்கள் முறையே, வருமாறு: II.47; XVIII.11; III.6; XVIII.60; IX.27; V.10; XVIII.46; XVIII.49; VI.3; IV.33; III.17; XVI.24.

தாகப் பாடிய மாதிரிதான் குமாரிலபட்டருக்கும் இருந்தது. காளவாயில் வேகிறதைவிடவும் நீடித்த சித்ரவதையாகத் துஷாக்னியில் அணு அணுவாகப் பொசுங்குவதும் துன்பமாக இல்லை. 'எந்தை இணையடி' என்று அப்பர் சொன்ன பகவத் பாதம்தானே சங்கர பகவத்பாதாள்!

குமாரிலபட்டர் ஆசார்யாளிடம் மனஸ் உருகி, 'தங்கள் தர்சனத்தாலும் தத்வோபதேசத்தாலும் க்ருதார்த்தனானேன். தங்கள் ஸித்தாந்தத்தை ஏற்றுக் கொள்கிறேன். தங்களுக்கே தெரியும், ஞானத்தை ஏன் அப்படிக் கண்டனம் பண்ணினேன் என்று. பௌத்தத்துக்கு நேர்மாறாகச் சொன்னாலே எடுபடு மென்றுதான் நிவ்ருத்தியை இப்படி ஆக்ஷேபித்து, அவர்கள் சீர்குலைத்திருந்த ப்ருவ்ருத்தி கர்மாக்களை நிலை நிறுத்த முழு மூச்சோடு பாடுபட்டேன். கடைசியாக ப்ராயச்சித்த கர்மா பண்ணிக் கொள்ளும்போது பலனாகப் பலதாதாவான ஈச்வரனே எதிரிலே ஸத்கதி தர வந்துவிட்டீர்கள்! தங்கள் வழியைக் கண்டித்தவனுக்கும் அதன் லக்ஷ்யத்தை அனுக்ரஹிக்க ஓடோடி வந்திருக்கிறீர்கள்! அந்த்ய காலத்தில் ஸமரிக்காதவனையும் கடைத்தேற்ற வந்திருக்கிறீர்கள்!

'தங்களுடைய அத்வைத வேதாந்தத்தை லோகம் பூரா தெரிந்து கொண்டு கடைத்தேறணும். எனக்கு அப்படி ப்ரசாரம் பண்ணும் பாக்யமில்லை; இன்னம் சிறிது நேரத்தில் உயிர் பிரிகிற ஸ்திதியிலிருக்கிறேன். தாங்கள் ஒன்று பண்ணணும். என்னைக் காட்டிலும் தீவ்ர மீமாம்ஸகர் ஒருவர் இருக்கிறார். மண்டனமிச்ரர் என்று பேர். மாஹிஷ்மதி நகரத்தில் இருக்கிறார்... (மண்டன மிச்ரர் இருந்தது ஹஸ்தினாபுரத்தை அடுத்துள்ள வித்யாலயம் என்ற ஊர் என்றும் அபிப்ராயம் இருக்கிறது. மாஹிஷ்மதி எது என்பது பற்றியே மூன்று நாலு அபிப்ராயங்கள் இருக்கின்றன. மண்டனமிச்ரர் குமாரிலபட்டரின் சிஷ்யர், சிஷ்யராயிருந்ததோடு மச்சினரும் என்றெல்லாமும் அபிப்ராயங்கள் இருக்கின்றன. இதெல்லாம் எப்படியிருந்தாலும், குமாரிலபட்டர் விஷயமாகச் சொன்னதுபோல, மண்டனமிச்ரருடைய பூர்வகதை, ஆசார்யாளை அவர் ஸந்தித்தபோது நடந்த விஷயங்கள், அப்புறம் நடந்த கதை ஆகியவற்றை எல்லாப் புஸ்தகங்களும் அனேகமாக ஒரே மாதிரிதான் சொல்லியிருக்கின்றன.. அவரைப் பற்றி ஆசார்யாளிடம் குமாரிலபட்டர் தொடர்ந்து சொன்னார்:)

'அவர் (மண்டன மிச்ரர்) நிரம்பச் செல்வமும் செல்வாக்கும் படைத்த வராயிருப்பதால் அந்தச் சீமை முழுக்க மீமாம்ஸா சாஸ்த்ரத்தை நன்றாகப் பரப்பியிருக்கிறார். பெரிய அனுஷ்டாதா. ஸோமயாகங்கள் உள்பட ஸதாகாலமும் பெரிசாக ஏதாவது கர்மானுஷ்டானம் பண்ணிக் கொண்டிருப் பவர். அவரைத் தாங்கள் நிவ்ருத்தி மார்க்கத்திற்குத் திருப்பி விட்டீர் களானால், ரொம்பப் பேர் திரும்பி விடுவார்கள். இது தாங்கள் அவச்யம் பண்ண வேண்டியது' என்று கேட்டுக் கொண்டார்.

அப்படியே செய்வதாக ஆசார்யாள் சொன்னார்.

குமாரிலபட்டர் உமிக் காந்தல் அக்னியில் தேஹ வியோகம் ஆகும் வரையில் ஆசார்யாள் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தார்.

ஆஞ்ஜநேயரின் வாலில் வைத்த நெருப்பு ஸீதையின் அனுக்ரஹத்தால் அவருக்குக் கொஞ்சங்கூடச் சுடாத மாதிரி, ஆசார்யாளின் ஸான்னித்யத்தில் துஷாக்னி குமாரிலபட்டருக்குக் குளிர்ச்சியாகவே இருந்தது. சரீரம் மாத்ரம்

ஜீர்ணமாயிற்று. அக்னி ஸ்வரூபமும், பரமேச்வரனின் நேத்ராக்னியிருந்து உண்டானவருமான ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியின் அவதாரம் அக்னி முகமாகவே பூர்த்தியாயிற்று!

தர்ம சாஸ்த்ரப்படி நடக்க வேண்டுமென்றே குமாரிலபட்டர் சரீர பரித்யாகம் பண்ணினார். இப்படிப்பட்டவர்கள் போட்டு வைத்த அஸ்தி வாரம் நம் மதத்துக்கு இருக்கிறது. ஆகையால், தற்போது எத்தனை கோளாறு இருந்தாலும் சாஸ்த்ரானுஷ்டானம் மறைந்தே போய்விடாது என்ற நம்பிக்கையோடு இருக்கலாம். மஹான்களுடைய ப்ராண த்யாகம் வீண் போகாது!

மண்டனமிச்ரரைப் பார்ப்பதற்காக ஆசார்யாள் மாஹிஷ்மதி நகரத்திற்கு வந்தார். 'ஐயோ, இந்தக் கர்ம மார்க்கக்காரர்கள் நித்யமான ஆனந்தம் என்ன என்பதில் புத்தியைச் செலுத்தாமல் அநித்யமான ஆனந்தத்தையே தரும் கர்மாவைப் பிடித்துக் கொண்டிருக்கிறார்களே! மோக்ஷ மார்க்கத்தில் சேராமல் திருப்பித் திருப்பி ஜன்மா எடுக்கிறார்களே! (வாதச்) சண்டை போட்டாவது இவர்களை நல்ல வழிக்குத் திருப்பணும்' என்ற கருணையிலேயே ஆசார்யாள் அலையாய் அலைந்தது. கருணையினாலேயே சண்டை!

ஊருக்கு வெளியிலே ஆற்றங்கரையில் ஸ்த்ரீகள் தீர்த்தம் எடுத்துக் கொண்டிருந்தார்கள். 'மண்டனமிச்ரரின் க்ருஹம் எங்கே இருக்கிறது?' என்று ஆசார்யாள் அவர்களைக் கேட்டார்.

அந்த ஊர் முழுவதையும் எப்படி மண்டனமிச்ரர் பண்டித லோகமாக்கியிருந்தார், மீமாம்ஸை, ந்யாயம் முதலான சாஸ்த்ர விஷயங்கள் பாமரப் பெண்டுகளுக்கும் இன்னும் கிளி மாதிரியான பக்ஷிகளுக்குங்கூட அற்றுப்படி ஆகிற விதத்தில் எப்படி ப்ரசாரம் பண்ணியிருந்தார் என்பதை 'சங்கர விஜய'ங்கள் இந்த இடத்தில் நயமாகச் சொல்கின்றன.

வழி கேட்ட ஆசார்யாளிடம் அந்தப் பெண்கள் ச்லோக ரூபமாகவே பதில் சொன்னார்களாம். சாஸ்த்ரக் கொள்கைகளில் பலவற்றை ஒவ்வொன்றாக அந்த ச்லோகங்களில் முதல் பாதத்தில் சொல்லி, மற்ற மூன்று பாதங்களில் ஒரே போல, 'எந்த வீட்டு வாசலில் உள்ள கூண்டுகளிலிருந்து பெண் கிளிகள் இந்தக் கொள்கையைப் பற்றி விவாதித்துக் கொண்டிருக்கின்றனவோ, அதுதான் மண்டனமிச்ரரின் வீடு' என்று முடித்தார்கள். முதல் பாதத்தில் ஏதாவது ஒரு ஸித்தாந்தத்தின் பெயர் வரும். அப்புறம் மூன்று பாதங்களில் பொதுவாக,

சுகாங்கநா யத்ர கிரம் வதந்தி
த்வாரே து நீடாந்தர ஸந்நிருத்தா:
அவேஹி தம் மண்டநமிச்ர தாம★

என்று வரும்.

'சுகாங்கனா' என்றால் பெண் கிளி. (ஆசார்யாளிடம் இச்சுலோகங்களைச்) சொல்பவர்களும் பெண்கள்; அவர்கள் மண்டனமிச்ரனின் வாசல் குறட்டில் சாஸ்த்ர விசாரம் செய்வதாகச் சொல்கிறவையும் பெண் கிளிகள்.

★ 'ஆனந்தகிரீயம்' 56-வது ப்ரகரணம்.

புருஷர்கள் அளவுக்கு ஸ்த்ரீகள் வித்யாப்யாஸம் பண்ணாத காலமானதால் அந்த ஊரின் பாண்டித்ய விசேஷம் தெரிவதற்காக இப்படிச் சொல்லியிருக்கிறது!

ப்ரமாணங்களைப் பற்றிய ரொம்பவும் சிக்கலான விஷயங்களைக்கூட அந்தக் கிளிகள் வாதம் பண்ணிக்கொண்டிருக்கும் என்று அந்த ஸ்த்ரீகள் சொன்னதாக 'மாதவீய சங்கர விஜய'த்தில் வருகிறது:

ஸ்வத: ப்ரமாணம் பரத: ப்ரமாணம்
கீராங்கநா யத்ர ச ஸங்கிரந்தே I
த்வாரஸ்த நீடாந்தர ஸந்நிருத்தா
ஜாநீஹி தந்-மண்டந பண்டிதௌக: II

(பின் மூன்று பாதங்களைப் பார்த்தால் 'ஆனந்த கிரீய'த்தை 'மாதவீயம்' எவ்வளவு நெருக்கமாக அனுஸரிக்கிறதென்பது தெரியும்.)

இது ப்ரமாணம், இது ப்ரமாணமில்லை என்று நிர்ணயிப்பது ப்ராமாண்ய வாதம் என்பது. ஸ்வத: ப்ரமாணம், பரத: ப்ரமாணம் என்று இரண்டு. ஒரு வஸ்துவை அது இன்னது என்று தெரிந்து கொள்கிறபோதே 'ஸரியாகத் தெரிந்துகொண்டு விட்டோம்' என்றும் தெரிந்து கொள்கிறோம்; சில ஸமயங்களில், 'இல்லை, தப்பாகத் தெரிந்து கொண்டிருக்கிறோம்' என்றும் தெரிந்து கொள்கிறோம் – உதாரணமாக, தகர டப்பா மேல் பளீரென்று வெய்யில் விழுந்து பார்க்கும்போது அது பளபளப்பதில் வெள்ளிப் பாத்ரமாகத் தெரிந்தாலும், 'இல்லை, நம்மாத்துத் தகர டப்பாவை அலம்பி வெயிலில் வைத்திருப்பதுதானே?' என்றும் தெரிந்து கொள்கிறோம். வெள்ளியாக அது மினுக்குவதாக அறிவுக்குத் தெரிந்தாலும், தெரிகிறபோதே இந்த அறிவு ப்ரமாணமில்லை, அப்ரமாணந்தான் என்றும் தெரிகிறது! இப்படியே ஒரு வெள்ளிப் பாத்ரத்தையே வெள்ளியாக உள்ளபடித் தெரிந்து கொள்ளும்போது அல்லது தகர டப்பாவைத் தகரம் என்றே ஸரியாகத் தெரிந்துகொள்ளும்போது நமக்குத் தெரிவது ப்ரமாணம்தான் என்றும் தெரிகிறது. இப்படி ஒன்று தெரியும்போதே அது நிஜமான (ப்ரமாணமான) அல்லது பொய்யான (அப்ரமாணமான) ஞானம் என்றும் தெரிகிறதே, இது நம் அறிவிலிருந்தே – 'ஸப்ஜெக்டி'வாக, 'ஸ்வதா'வாக – ஏற்படுவதா, அதாவது ஸ்வத: ப்ரமாணமா அல்லது வெளி வஸ்துவிலிருந்து – 'ஆப்ஜெக்டி'வாக, 'பரத'ஸாக – ஏற்படுகிறதா, அதாவது பரத: ப்ரமாணமா என்பது பற்றி ந்யாயம், மீமாம்ஸை முதலான தர்சனங்களில் வித்யாஸமாக அபிப்ராயங்கள் உள்ளன. ந்யாய சாஸ்த்ரத்தின்படி ப்ரமாண ஞானம், அப்ரமாண ஞானம் இரண்டுமே பரத: ப்ரமாணம்தான். மீமாம்ஸகர்களோ 'நாம் தெரிந்து கொள்வது ஸரியானது என்கிற ப்ரமாண ஞானமும் நம் அறிவிலிருந்தே உண்டாவதுதான்; அதாவது ஸ்வத: ப்ரமாணம்தான். ஆனால், நாம் தப்பாகத் தெரிந்துகொள்கிறோம் என்கிற அப்ரமாண ஞானம் வெளி வஸ்துவைப் பொறுத்தே ஏற்படுவது; அதாவது பரத: ப்ரமாணம்' என்பார்கள்★

★ இதற்கான விளக்கம் அருள்உரை 31வது புத்தகத்தில் இடம் பெற்றுள்ள சில கதைகளும் வாதங்களும் என்ற உரையில் கொடுக்கப்பட்டுள்ளது.

இம்மாதிரி ஸமாசாரங்களை மண்டனமிச்ரருடைய அகத்துக் கிளிகள்கூட டிஸ்கஸ் பண்ணிக் கொண்டிருக்குமாம்.

இந்த அடையாளத்தை வைத்துக்கொண்டு ஆசார்யாள் அந்த வீட்டைத் தேடிக்கொண்டு போய்க் கண்டுபிடித்தார்.

ஒரே கார்யக்காரர் வீட்டுக்கு ஒரே சும்மா நிலைக்காரர் போய்ச் சேர்ந் தார்! மண்டனமிச்ரர் குமாரிலபட்டரைப் போல மாற்றுக் கக்ஷிக்காரரை மதித்து வரவேற்கும் குணமுள்ளவராக இல்லை. வேத கர்மாக்களை விட்டு விட்டு 'ஞானம்' என்று சொல்லிக்கொண்டிருக்கும் ஸன்னியாஸிகள் என்றால் அவருக்குக் கட்டோடு பிடிக்காது. அவர்களைப் பார்த்தாலே பாபம் என்று நினைத்தார்! அந்த வீட்டுக்கு அழையா விருந்தாளியாக ஆசார்யாள் போய்ச் சேர்ந்தார், 'எத்தனை விரோத பாவம் கொண்டவரானாலும் நாம் ஸத்ய தத்வத்தை அவர்களுக்கு எடுத்துச் சொல்லாமலிருக்கப் படாது' என்ற கருணையிலே!

அன்றைக்குப் பார்த்து மண்டனமிச்ரர் வீட்டில் ச்ராத்தம்! இப்படியொரு பித்ரு கர்மாவில் ஸன்னியாஸியைப் பார்த்தால் இரட்டிப்புப் பாபம் என்று அவர் நினைத்திருப்பார்!

'ச்ராத்தம்' என்றால் 'ச்ரத்தையோடு செய்யப்படுவது' என்று அர்த்தம். நிஜமாகவே அப்படி உள்ளே மண்டனமிச்ரர் பண்ணிக் கொண்டிருந்தார். அனாசார வாடை எதுவும் உள்ளே வரக்கூடாதென்று வாசற்கதவைச் சாத்தி யிருந்தது.

ஆசார்யாள் எப்படியும் அவருக்கு அனுக்ரஹித்தே தீருவது என்று வந்தி ருந்தார். அதனால் ஒரு வேடிக்கையான விதத்தில் உள்ளே போய்விட்டா ரென்று கர்ண பரம்பரையாகக் கதை இருக்கிறது.

அக்காலத்தில் சாணார்களுக்கு ஒரு வித்தை தெரியுமாம். தென்னை மரத் தின் அடிப்பாகத்தில் ஒரு மந்த்ரம் சொல்லி அடிப்பார்களாம். உடனே அது துவண்டு, வளைந்து, உச்சி பூமியைத் தொடுமாம். அந்த உச்சியிலே சாணான் ஏறிக்கொள்வான். அங்கே காய் பறிப்பதோ, கள் இறக்குவதோ தன் கார்யத் தைப் பண்ணிக்கொள்வான். அப்புறம் எந்தப் பக்கம் இறங்க நினைக் கிறானோ, அப்படி அந்த மரம் திரும்பி, வளைந்து, உச்சியால் பூமியைத் தொடும்படி மந்த்ரம் போடுவானாம். மரம் அப்படியே பண்ணியவுடன் ஸுலபமாக இறங்கிவிடுவான்.

மண்டனமிச்ரரின் அகத்துக்கு வெளியில் ஒரு தென்னை மரம் இருப்பதை ஆசார்யாள் பார்த்தார். அந்தப் பக்கமாக ஒரு சாணான் போவதையும் பார்த் தார். அவனிடம் போய், 'உன் வித்தையை எனக்குச் சொல்லிக் கொடு' என்று கேட்டுக்கொண்டார். வித்யா ஸ்வீகரணத்தில் பெரியவன்-சின்னவன் என்ற பேதம் கூடாது என்ற சாஸ்த்ரக் கருத்தை ஏற்றுக்கொள்ளும் எளிமை ஆசார் யாளுக்கு இருந்தது. அப்படித்தான் ஸர்வஜ்ஞரானார். அவனும் சொல்லிக் கொடுத்தான். அப்புறம் ஆசார்யாள் அந்த வித்தையால் தென்னை மரத்தை வளைத்து ஏறிக்கொண்டு, அது வீட்டு உள்பக்கம் திரும்பி, முற்றத்தில் தம்மை இறக்கி விடும்படிப் பண்ணினார்.

இது கர்ண பரம்பரைக் கதை. சங்கர விஜயங்களில் யோக சக்தியால் உள்ளே போனார் என்று இருக்கும்.

இவர் உள்ளே போனபோது பிராமணர்களைப் போஜனத்துக்கு அமர்த்துகிற கட்டம். அந்த பிராமணர்கள் யாரென்றால் மஹாப் பெரியவர்களான இரண்டு பேர். ஒருவர் மீமாம்ஸா சாஸ்த்ரத்தின் ஆதாரமான ஸூத்ரத்தைச் செய்த ஜைமினி மஹர்ஷி. மற்றவர் ஸாக்ஷாத் வ்யாஸாசார்யாள். மண்டன மிச்ரரின் அனுஷ்டான ச்ரத்தையை மதித்து அவர்களே கண்ணுக்குத் தெரியும்படி பிராம்மணார்த்தத்துக்கு வந்திருந்தார்கள்.

ஸர்ப்பம் எதுவும் அண்ட முடியாமல் பரீக்ஷித்து எத்தனையோ பந்தோபஸ்து பண்ணிக் கொண்டிருந்தும் தக்ஷகன் என்கிற நாகராஜன் எலுமிச்சம் பழத்தில் ஒளிந்துகொண்டு அவனிடம் போனானால்லவா? அப்படி மண்டனமிச்ரர் மஹர்ஷிகளை வைத்துக்கொண்டு பந்தோபஸ்தாக பித்ரு கார்யம் பண்ணியும், அவர் கண்டாலே கரித்த இந்த ஸன்னியாஸி மூடின கதவை மீறி அவரிடம் போய்ச் சேர்ந்தார்! தக்ஷகன் விஷத்தைச் செலுத்தப் போனான். இவர் ஞானாம்ருதத்தைச் செலுத்துவதற்காகப் போனார்!

'இந்த ஸமயத்தில் திடீரென்று ஸன்னியாஸிப் பயல் வந்து குதித்திருக்கிறானே!' என்று மண்டனமிச்ரருக்கு மஹாக் கோபம் வந்தது. 'எங்கேயிருந்து, முண்டி?' என்று சத்தம் போட்டார். முண்டி என்றால் மொட்டைத் தலைக்காரன். சௌள ஸம்ஸ்காரம் பண்ணி வைக்கிற குடுமியை ஸன்னியாஸி அறுத்துப் போடுவதால் மீமாம்ஸகர்கள் அவனை 'முண்டி' என்று கரித்துக் கொட்டுவார்கள்.

'எங்கேயிருந்து வந்து தொலைஞ்சே?' என்கிற அர்த்தத்தில் இவர், 'எங்கேயிருந்து, முண்டி?' என்று கேட்டார்.

ஆசார்யாள் வேண்டுமென்றே அதற்கு வேடிக்கையாக அர்த்தம் பண்ணிக் கொண்டு பதில் சொன்னார். சரீரத்தில் எங்கேயிருந்து ஆரம்பித்துக் கேச விஸர்ஜனம் என்று அவர் கேட்டதாக வைத்துக்கொண்டு, 'கழுத்திலிருந்து முண்டி!' என்றார். ஸன்னியாஸிகள் கழுத்துக்குக்கீழ் முண்டனம் செய்து கொள்ளக் கூடாது.

இதேபோல மண்டனமிச்ரர் மேலே மேலே கேட்ட கேள்விகளுக்கும் ஆசார்யாள் வேறுவிதமாக அர்த்தம் பண்ணிக்கொண்ட மாதிரியே வேடிக்கையாக 'டக்.. டக்..'கென்று பதில் சொல்லிக்கொண்டு போனதாகப் புஸ்தகங்களிலிருக்கிறது. ச்ருதி வாக்யங்களைத் தாங்கள்தான் ஸரியாகப் புரிந்துகொண்டு எப்படி அர்த்தம் செய்ய வேண்டுமோ அப்படிப் பிரித்து, சேர்த்துப் பண்ணுவதாக மீமாம்ஸகர்களுக்குத் தற்பெருமை உண்டு. அப்படிப் பட்ட மீமாம்ஸகருடைய வார்த்தையிலேயே இரண்டு அர்த்தம் கண்டுபிடித்து ஆசார்யாள் பதில் சொல்லிக்கொண்டு போனார்!

மண்டனமிச்ரருக்கு அவமானமாகி, ஆத்திரம் தலைக்கேறியது. ஆனால் ச்ராத்த காலத்தில் ஏதும் அஸம்பாவிதம் நேராமல் ஜைமினியும் வ்யாஸரும் அவரை ஸமாதானப்படுத்தினார்கள். ஆசார்யாளின் பெருமை தெரிந்தவர்களானதால், 'ஸன்னியாஸியை விஷ்ணு இலையில் அமர்த்துவது சாஸ்த்ர ஸம்மதமேயானது. ஆகையால் இவரை அப்படி உட்காரவைத்து பிக்ஷை

பண்ணு. அதுதான் யுக்தம்' என்று சொன்னார்கள்.

பிராம்மணார்த்தக்காரர்கள் யாரானாலுமே அவர்கள் சொல்வதை மீறக் கூடாதென்று சாஸ்த்ரம். இவர்களோ மஹாப் பெரியவர்கள். என்ன பண்ணுவது? வேறே வழியில்லாமல் மண்டனமிச்ரர் வேண்டாவெறுப்பாக ஆசார்யாளுக்கு நமஸ்காரம் பண்ணி, 'பிக்ஷைக்கு உட்காரணும்' என்று கேட்டுக் கொண்டார்.

ஆசார்யாள், 'நான் அன்ன பிக்ஷைக்கு வரவில்லை. வாத பிக்ஷைக்கு வந்திருக்கிறேன். குமாரிலபட்டர் சொல்லி வந்திருக்கிறேன்' என்றார்.

பட்டர் பேரைச் சொன்னதும் மண்டனமிச்ரரின் த்வேஷ பாவம் மாறிற்று. 'முதலில் இந்த பிக்ஷையை ஏற்றுக்கொள்ளணும். அப்புறம் வாதம் செய்வோம்!' என்றார்.

நல்லபடியாக திவஸம் முடிந்தது. வ்யாஸரும் ஜைமினியும் வந்தபடியே போனார்கள்.

அப்புறம் ஆசார்யாளும் மண்டனமிச்ரரும் வாதம் செய்ய ஆரம்பித்தார்கள்.

தீர்ப்புச் சொல்ல, மத்யஸ்தமாக யாரை வைத்துக் கொண்டார்களென்றால், மண்டனமிச்ரரின் பத்னியான ஸரஸவாணியைத்தான்.

'யாரோ ஊர்ப் பெண்டுகளையும் கிளிகளையுங்கூட தேர்ந்த சாஸ்த்ர ஞானமுள்ளவர்களாக இவர் ஆக்கியிருக்கிறாரென்றால் இவருடைய ஸொந்தப் பத்னி மஹா பண்டிதையாகத்தானே இருக்க வேண்டும்?' என்பதால் ஆசார்யாள் அவளுடைய மத்யஸ்தத்துக்கு ஒப்புக்கொண்டிருப்பார் என்று சொல்லலாம். இது மானுஷமாகச் சொல்வது. அவதாரம் என்று பார்த்தால் ஆசார்யாளுக்கு மண்டன மிச்ரர் ப்ரம்மாவே என்றும், ஸரஸவாணி வித்யாதி தேவதையான சாரதையே என்றும் தெரிந்திருக்க வேண்டும். ஸரஸ்வதியின் தீர்ப்புக்கு யார்தான் கட்டுப்பட மாட்டார்கள்?

ஸரஸவாணிக்கு ஒரு தர்ம ஸங்கடம். இரண்டு பேரில் ஒருத்தர் தோற்றுப் போனதாக அவள் தீர்ப்புக் கொடுக்க வேண்டிவரும். 'பர்த்தாவை அப்படிச் சொல்வது முறையாயில்லை; ஒரு ஸன்னியாஸ ச்ரேஷ்டரைச் சொல்வதும் நன்றாயில்லையே!' என்று பார்த்தாள். 'நம் வாயால் ஒன்றும் சொல்ல வேண்டாம்' என்று நினைத்து ஒரு யுக்தி செய்தாள். இரண்டு பேருக்கும் புஷ்ப ஹாரங்களை அர்ப்பணம் பண்ணிப் போட்டுக்கொள்ளச் சொல்லி, 'யாருடைய ஹாரம் வாடாமலே இருக்கிறதோ அவருக்கே ஜயம்' என்று சொன்னாள்.

வாதம் ஆரம்பிக்குமுன் இரண்டு பேரும் ஒரு நிபந்தனை செய்து கொண்டார்கள். ஆசார்யாள் ஜயித்தால் மண்டன மிச்ரர் க்ருஹஸ்தாச்ரமத்தையும், அக்னி ஹோத்ராதி அனுஷ்டானங்களையும் விட்டுவிட்டு ஸன்னியாஸம் வாங்கிக் கொள்ளவேண்டும்; மண்டனமிச்ரர் ஜயித்தால் ஆசார்யாள் ஸன்னியாஸத்தை விட்டுவிட்டு, க்ருஹஸ்தராகிக் கர்மானுஷ்டானமெல்லாம் பண்ண வேண்டும், என்று. சுத்த ப்ரஹ்மசர்ய மூர்த்தியான ஆசார்யாள் ஒரு நாளும் ஒப்புக்காகக்கூட 'நான் க்ருஹஸ்தனாகிறேன்' என்று சொல்லியிருக்க மாட்டார் என்பதால் இன்னொரு தினுஸாகவும் சொல்வதுண்டு. அதாவது,

தாம் தோற்றுப் போனால் 'மரணாந்த ப்ராயச்சித்தம்' பண்ணிக்கொள்வதாகச் சொன்னார் என்பார்கள். ப்ராணன் போகும்வரை ஆஹாரத்தைத் தொடுவதில்லை, ஜல பானம் பண்ணுவதில்லை என்று உபவாஸமிருப்பது தான் 'மரணாந்த ப்ராயச்சித்தம்'. தம்முடைய ஸன்னியாஸ சரீரத்தைக் கொண்டு குடும்ப வாழ்க்கை வாழ்வதைவிட அதை த்யாகமே பண்ணத்தான் ஆசார்யாள் நினைப்பார் என்பதால் இப்படிச் சொல்வது.

வாதம் ஆரம்பித்தது. முன்னே வ்யாஸருக்கும் ஆசார்யாளுக்கும் நடந்த மாதிரிதானே இதுவும் இரண்டு பண்டித பர்வதங்கள் ஒருவருக்கொருவர் சளைக்காமல் மோதிக் கொள்வதாயிருந்தது. இருபத்தியோரு நாள் இப்படி வாதம் நடந்தது.

கர்மா, பக்திகளால் முடிவாக ஞானத்தையே அடைய வேண்டுமென்று ஆசார்யாள் ச்ருதி, யுக்தி, அனுபவங்களால் நன்றாக எடுத்துக் காட்டினார். பக்தியின் அன்பும், அப்புறம் அன்பு நிறைந்து அடங்கிப் போகிற அத்வைத ஞானத்தின் சாந்தம், இவற்றால்தான் ஜீவனுக்குப் பூர்ணத்வம், இதுவே வேதங்களின் பரம தாத்பர்யம் என்று காட்டினார். அந்த அன்புக்கும், சாந்திக்கும் இருப்பிடமாக உள்ளவனே ஸன்னியாஸி; அவன் கர்மத்தை விட்டவனென்பதால் நிந்திக்கத் தக்கவனல்ல என்று காட்டினார்.

'அக்னிஹோத்ர அக்னியை அணைத்தவன் வீரஹத்தி தோஷத்துக்கு ஆளாகிறான்' என்ற தைத்திரீய ப்ராஹ்மண வசனம் போலுள்ள வேத வாக்யங்களைக்கொண்டு கர்மாவை விட்ட ஸன்னியாஸியை தூஷிப்பது ஸரியேயில்லை. அந்த வாக்யங்களெல்லாம் ப்ரவ்ருத்திக்கே பக்குவமாயிருப்பவனை உத்தேசித்தவைதான். அப்படிப்பட்டவன் கர்மாவைவிட்டு இஷ்டப்படிக் கீழே போய் வீணாவதைத்தான் தடுத்திருக்கிறது. கர்மாவைவிட்டு மேலே நிவ்ருத்திக்குப் போகிறவனோ வெளி அக்னியைத் தன்னுடைய ஞானாக்னியில்தான் ஆரோபித்துக்கொண்டு (ப்ரதிஷ்டை செய்து கொண்டு) அதை மேலும் ஜ்வலிக்கச் செய்கிறானேயொழிய அணைத்து விடவில்லை. ஸம்ஸார வ்ருக்ஷத்தில் பழுத்த பழமாகிக் காம்பறுந்து விழும் கனியாக இருப்பவன் அவன். அரும்பும், பூவும், காயுமாக உள்ளமட்டும் ஸதா கார்யம் பண்ணிக் கொண்டு, ஜலத்தை உறிஞ்சிக்கொண்டு, ஸூர்ய ரச்மியை க்ரஹித்துக் கொண்டு இதழ், இதழாக, கலர் கலராக ஆகிக் கொண்டு, ஸைஸிலும் தினந் தினம் பெரிசாகிக்கொண்டு, ருசியிலும் கசப்பு-துவர்ப்பு-புளிப்பு என்று ருசி மாறிக் கொண்டே இருக்க வேண்டியதுதான். அப்போது ஸம்ஸார வ்ருக்ஷத்திலிருந்து அறுக்கப் பார்த்தால் ஒரே அழுகையாய்த்தான் இருக்கும். காம்பிலிருந்து ஒரேயடியாக ஜலம் கொட்டும். ஆனால் அப்புறம் இப்படிக் கார்யம் பண்ணிப் பண்ணியே கசப்பு-துவர்ப்பு-புளிப்பெல்லாம் போய் ஒரே மதுரமாகிக் கனிந்துவிட்ட பிறகு பழத்தை யாராலும் வ்ருக்ஷத்தில் இருத்தி வைக்க முடியாது. துளிக்கூட ஜலம் சொட்டாமல் காம்பு இற்று அது அப்படியே விழுந்துவிடும். நிவ்ருத்திதான்! அப்புறம் அதற்கு ஒரு கார்யமுமில்லை. அது மாதிரி, ஞானப் பக்குவம் பெறும் வரையில் சாஸ்த்ர ப்ரகாரம் ஸதா கார்யம் பண்ணிக் கசப்பான, துவர்ப்பான, புளிப்பான அனுபவங்களையெல்லாம் நன்றாக அனுபவித்து, நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே போக வேண்டியது தான். ஆனாலும் ப்ரேமையின் மாதுர்யத்தில் நிறைந்து எல்லாம் ஒன்றாகப் பார்க்கிற ஞானப் பழமானபின் ஸகல கார்யத்தையும் விட வேண்டிய

தேயாகும். உள்ளேயிருக்கிற அத்வைத ஞானமே வெளியில் ஸகல ப்ராணி களையும் ஒன்றாகப் பார்த்து ஸமமாகப் பெருகும் ப்ரேமையாக ஆகிவிட, அப்படியே சும்மாயிருந்து கொண்டிருக்க வேண்டியதுதான். 'எல்லா ப்ராணிக்கும் நான் அபய ஸ்தானமாக இருப்பேன்' என்று ப்ரைஷோச் சாரணம் பண்ணி ஸன்னியாஸியாகிறவன் இந்த அன்புக்கும் சாந்திக்குமே இருப்பிடம். அதற்கு ஏறுவதற்குத்தான் இத்தனை ஸ்வதர்ம கர்மாக்களும்! இவ்விஷயங்களை ஆசார்யாள் எடுத்துச் சொன்னார்.

'தம்முடைய ஸித்தாந்தம் ஸரியில்லை. ஆசார்யாள் சொல்வதுதான் ஸரி. ஜயம் அவருக்குத்தான்' என்று மண்டனமிச்ரர் புரிந்து கொண்டார். தோற் றுப் போனதற்காக இல்லாமல் மனஸாறவே ஞான மார்க்கத்தை ஏற்றுக் கொண்டார்.

ஆனாலும் ஸரஸவாணியை மத்யஸ்தமாக வைத்துவிட்டதால் அவள் முடிவு சொல்ல விடுவதுதானே மரியாதை. அதனால் சும்மா இருந்தார்.

அவளும் ஹாரத்தைப் போட்டு அது முடிவு சொல்லட்டும் என்றுதானே விட்டிருந்தாள்? இப்போது என்ன ஆயிற்றென்றால் மண்டனமிச்ரரின் ஹாரம் வாடிப்போயிற்று!

பதி ஸன்னியாஸியாகிறாரென்றால் ஒரு பத்னிக்கு எப்படியிருக்கும்?

அதனால், பத்னி என்பவள் பதியின் அங்கமே ஆகையால் தன்னையும் ஆசார்யாள் ஜயித்தாலே ஜயம் பெற்றதாகும் என்று சொன்னாள். இது நம் மனுஷ மட்டத்தில் தெரிகிற விஷயம். உள்ளே தாத்பர்யம் என்னவென்றால் ஆசார்யாள் ஸர்வஜ்ஞர்தான் என்பதை ஸாக்ஷாத் ஸரஸ்வதியுடனேயே அவர் வாதம் செய்து ஜயிப்பதன் மூலம் காட்ட வேண்டும் என்பதே! வஸிஷ்டர் வாயால் ப்ரம்மரிஷி என்பதுபோல் ஸரஸ்வதி வாயால் ஆசார்யாள் ஸர்வஜ்ஞர் என்று தீர்ப்புப் பெறுவதற்குத்தான் ஸரஸவாணியின் அவதாரமே ஏற்பட்டது.

மஹா பண்டிதையாக விளங்கிய ஸரஸவாணியுடனும் ஆசார்யாள் வாதம் செய்து ஜயித்தார்.

ஸரஸ்வதி தன்னுடைய ஸ்வய ரூபத்திலேயே வந்து பிற்பாடு ஆசார்யாள் ஸர்வஜ்ஞ பீடாரோஹணம் செய்தபோதுதான் வாதம் செய்து முடிவில் அவர் ஜயித்ததாக ப்ரகடனம் செய்தாள் என்றும் கதை இருக்கிறது.

பதி தோற்றுப் போய்விட்டார் என்று எப்படி ஒரு பத்னி சொல்ல முடியும்? இந்த இடத்தில் அறிவு தேவதையின் அவதாரமான ஸரஸவாணி எப்படி ஸமாளித்தாள் என்பது மனஸைத் தொடுகிற மாதிரி இருக்கிறது. நேரே சொல்லாமல் குறிப்பால் உணர்த்திச் சொன்னாள். என்ன செய்தா ளென்றால் இரண்டு பேரையும் நமஸ்காரம் பண்ணி, 'இரண்டு பேரும் பிக்ஷைக்கு வாருங்கள்' என்று சொன்னாள்.

க்ருஹஸ்தனை 'போஜனத்திற்கு வாருங்கள்' என்றோ, அல்லது சாஸ்த் ரோக்தமாகச் சொல்வதானால் 'வைச்வ தேவத்திற்கு வாருங்கள்' என்றோ தான் சொல்ல வேண்டும். ஸன்னியாஸிக்குத்தான் 'பிக்ஷை' பண்ணுவது. இரண்டு பேரையுமே 'பிக்ஷைக்கு வாருங்கள்' என்று சொல்லி நமஸ்காரம் பண்ணியதிலேயே மண்டன மிச்ரர் தோற்றுப் போயாச்சு. அதனால் நிபந்

தனைப்படி ஆசார்யாளிடம் ஸன்னியாஸம் வாங்கிக்கொள்ள வேண்டியது தான் என்பதை ஸரஸவாணி நாஸூக்காகத் தெரிவித்துவிட்டாள்.

பாத்தா ஸன்னியாஸியாகி வீட்டை விட்டுப் போகிறாரென்பது எந்தப் பத்னிக்கும் இருக்கக் கூடியதைவிட அவளுடைய மனஸுக்கு ரொம்ப க்லேச மான விஷயமாகத்தானிருந்தது. இவளுடைய புத்திக்கு ஈடு கொடுத்து ஸம்பாஷித்துக் கொண்டிருந்த மஹா பண்டிதர், அவர் ஸதாவும் பண்ணும் யாகாதிகளில் இவள்தான் யஜ்ஞ பத்னியாகச் சேர்ந்து சேர்ந்து எல்லாம் பண்ணியிருக்கிறாள் – அப்படிப்பட்டவர் பிரிந்து போகிறாரென்றால் எப்படியிருக்கும்? ஆனாலும் ஸத்யம்தான் பெரிசு என்று Self-Interestஐ sacrifice பண்ணி (தன்னலனை த்யாகம் பண்ணி)த் தீர்ப்புக் கொடுத்தாள். 'ஹாரந்தானே வாடித் தீர்ப்புப் பண்ணிற்று?' என்றால், அந்த ஹாரத்தில்தான் இவள் தன்னுடைய சித்தத்தை ஆரோபணம் பண்ணியிருந்தாள் (உறைவித் திருந்தாள்). இல்லாவிட்டால் எங்கேயாவது பூமாலை 21 நாட்கள் வாடாம லிருக்குமா?

ஆசார்ய மஹிமை லோகத்தில் நன்றாகத் தெரியவேதான் அவள் தானும் வாதம் செய்து தோற்றுப்போனது. பல தேவர்கள் அப்போது அவதாரம் செய்திருந்தாலும் இவள் விஷயமாகத்தான் லோகத்திற்கே ஓரளவு நன்றாகத் தெரியும் – ஸரஸ்வதியவதாரம் என்று. 'உபய பாரதி' என்றே அவளை லோகம் கொண்டாடிக்கொண்டிருந்தது. அதனால் அப்பேர்ப்பட்டவள் ஆசார்யாளின் வாதத்திற்கே ஜயம் என்று சொன்னால் அதற்கு மதிப்பு ஜாஸ்திதானே?

பர்த்தாவுக்கு ஸன்னியாஸம் கொடுக்க வருகிறவரை பத்னி அடித்து விரட்டத்தான் செய்வாள்! இவளானால் நமஸ்காரம் பண்ணி, பக்தியோடு பிக்ஷைக்குக் கூப்பிட்டாள்!

நம் தேசத்தின் உத்தம ஸ்த்ரீகளில் ஸரஸவாணிக்கு ஒரு முக்யமான இடமுண்டு...

மண்டனமிச்ரர் ஆசார்யாளிடம் ஸன்னியாஸம் வாங்கிக் கொண்டு சிஷ்யரானார். அதிலிருந்து அவருக்கு ஸுரேச்வரர் என்று பெயர் ஏற்பட்டது.

'பதி இல்லாமல் இங்கே என்ன வேலை?' என்று ஸரஸவாணி ஸரஸ்வதி ரூபத்தை எடுத்துக்கொண்டு ப்ரம்ம லோகத்துக்குப் புறப்பட்டாள்.

அப்பொழுது ஆசார்யாள், 'நீ இப்படிப் போகப்படாது. உன் ஸான் னித்யம் லோகத்துக்கு எக்காலமும் இருந்து நல்லறிவைக் கொடுத்துக் கொண் டிருக்கணும்' என்று சொல்லி வனதுர்கா மந்த்ரத்தால் அவளைக் கட்டினார்.

அவளே அன்புக்கும், ந்யாயத்துக்கும் கட்டுப்பட்டவள்தான். ஆனாலும் மந்த்ர மஹிமை தெரிவதற்காக இப்படியொரு நாடகம்! பல தினுஸில் லோகத்துக்குப் பல உண்மைகளைத் தெரிவிப்பதாகவே ஸீன், ஸீனாக நிறைய நடிப்பதுதான் அவதார நாடகம்!

★அதற்கு ஸரஸ்வதி, 'ஸரி, ஆனால் இந்த ஊரிலேயே நான் இருக்கணு

★ மேலே வரும் கதாபாகத்தைச் சிறிது மாறுதலாக ஸ்ரீசரணர்கள் பிறிதொரு சமயம் உபன்னியஸித்ததை அருள்உரை 39வது புத்தகத்தில் இடம் பெற்றுள்ள முதலுக்கு முதல்; முடிவுக்கு முடிவு என்பதில் காணலாம்.

மென்று ப்ரதிஷ்டை பண்ணிவிடாதீர்கள். நீங்கள் பாட்டுக்குத் தேச ஸஞ்சாரம் பண்ணிக்கொண்டே போங்கள். நான் பின்னாலேயே வந்து கொண்டிருக்கிறேன். திரும்பிப் பார்க்கப்படாது. எங்கே பார்க்கும்படியாக ஏற்பட்டுவிடுமோ அங்கே நான் நித்யவாஸமாக இருந்து விடுகிறேன். அங்கே என்னைக் கோயில் கட்டி வைத்து, லோக க்ஷேமார்த்தமாக சாரதா பீடம் என்று ப்ரதிஷ்டை பண்ணிவிடுங்கள்' என்றாள். நாடகத்தில் இப்படி இன்னொரு ஸீன்!

ஆசார்யாள், ஸுரேச்வராசார்யாளோடு புறப்பட்டார். ஸரஸ்வதி பின்னாலேயே போய்க் கொண்டிருந்தாள். அவருடைய சிலம்பின் 'ஜல் ஜல்'லிலிருந்தே அவள் பின்னால் வருவதை ஆசார்யாள் தெரிந்துகொண்டு திரும்பிப் பார்க்காமலே போனார்.

ரொம்பத் தூரம் இப்படித் தெற்காக ஸஞ்சாரம் பண்ணித் துங்கபத்ரா தீரத்தில் ச்ருங்கேரிக்கு வந்தார்கள். அங்கே நிறை கர்ப்பிணியாயிருந்த ஒரு தவளைக்கு வெயில் படாமல் ஒரு பாம்பு குடை பிடித்துக் கொண்டிருப்பதை ஆசார்யாள் பார்த்தார். 'தவளையைக் கண்டால் சப்புக் கொட்டிக் கொண்டு பிடித்துத் தின்னுகிற பாம்பு இப்படி ப்ரியமாக ரக்ஷிக்கிறதே? த்வேஷம் தெரியாத இந்த ப்ரதேசத்தில் சாரதாம்பாள் கோயில் கொண்டால் எத்தனை நன்றாயிருக்கும்?' என்று நினைத்தபடி ஆசார்யாள் நதிக்கரையில் போய்க் கொண்டிருந்தார்.

சட்டென்று 'ஜல் ஜல்'லும் நின்றது. 'என்ன ஆச்சு?' என்று திரும்பிப் பார்த்தார்.

என்ன ஆயிருந்ததென்றால் ஆற்றங்கரை மணலில் பாதம் புதைந்து, புதைந்து அவள் நடந்து வந்ததில்தான் சிலம்பு ஓசை பண்ணவில்லை!

இவர் திரும்பிப் பார்த்ததால் அவள் நின்றுவிட்டாள்.

'எல்லாம் நல்லதற்கே! நாம் நினைத்ததற்கே அவளுடைய நிபந்தனையும் ஸாதகமாயிடுத்து!' என்று ஆசார்யாள் ஸந்தோஷித்து அங்கேயே சாரதாம்பாளை பீடம் ப்ரதிஷ்டை பண்ணி அமர்த்திவிட்டார்.

அந்த இடம் அவருக்கு ரொம்பப் பிடித்துவிட்டதால் அங்கேயே மடம் ஸ்தாபித்து பஹுகாலம் வாஸம் பண்ணி அவளை உபாஸித்துக் கொண்டிருந்தார். புஸ்தகங்களை எல்லாம் முதல் பதினாறு வயஸில் எழுதி முடித்த ஆசார்யாள், அப்புறம் இரண்டாம் பதினாறு வயஸில்தான் – பதினோறே வருஷத்தில்தான் – ஆஸேது ஹிமாசலம் மூன்று தரம் தேசம் முழுக்க ஸஞ்சாரம் செய்து, அனேகக் கார்யங்கள் பண்ணினது. இந்தக் குறைந்த காலத்துக்குள்ளேயே அவர் 'மாக்ஸிமம்' காலம் தங்கியிருந்தது ச்ருங்கேரியில்தான் என்று 'சங்கர விஜய'ங்களிலிருந்து தெரிகிறது.

ச்ருங்கேரி மடத்துக்குத் தனி விசேஷம் என்னவென்றால்: மற்ற மடங்கள் ஆசார்யாள் உத்தேசித்து ஸ்தாபனம் பண்ணியவை. 'சார்தாம்' என்று பாரத தேசத்தின் நாலு கோடிகளில் நாலு புராதன க்ஷேத்ரங்கள் உண்டு – வடக்கே பத்ரிநாதம், மேற்கே த்வாரகாநாதம் (அல்லது ஸோமநாதம்), கிழக்கே ஜகந்நாதம் (புரி), தெற்கே ராம நாதம் (ராமேச்வரம்) என்று. இவற்றில் பத்ரி, த்வாரகா, புரி முதலியவற்றில் மூன்று ப்ரதான மடங்களை ஸ்தாபித்

தார். தெற்கே மட்டும் ராமேச்வரத்தில் மடமில்லை. இவர் 'ப்ளான்' போட விடாமல், வித்யாதிதேவதையே ச்ருங்கேரியில் மடம் ஏற்படும்படியாகப் பண்ணிவிட்டாள்! அந்த மடத்துக்கெனக் குறிப்பாக ஏற்பட்ட க்ஷேத்ரம் 'ராம க்ஷேத்ரம்' என்று வைத்திருக்கிறார். அது ராமேச்வரம் என்றே நடைமுறையில் இருக்கிறது.

அப்புறம், காஞ்சீபுரம் லோகத்துக்கே நாபி என்ற மத்ய ஸ்தானமாக இருந்ததால் அங்கே மட ஸ்தாபனம் பண்ணினார். இவை முக்யமான மடங்கள். இன்னும் பலவும் ஸ்தாபித்தார். எல்லாம் அவர் உத்தேசப்படி. ச்ருங்கேரியில்தான் சாரதாம்பாள் தன் உத்தேசப்படி மடம் ஏற்படுத்திக் கொண்டது!

மீமாஸ்கர்களின் ப்ரதான புருஷராயிருந்த மண்டன மிச்ரர் ஆசார்யாளின் சிஷ்யரானது, வேதாந்த மதத்தின் புனருத்தாரணத்துக்குப் பெரிய பலம் கொடுத்தது.

ஆனாலும், மனுஷ ஸ்வபாவம் எத்தனை பெரியவர்களையும் எப்படிக் கொஞ்சமாவது ஆட்டிவைத்து விடுகிறது என்று தெரிவிப்பதுபோல, ஆசார்யாளின் மற்ற சிஷ்யர்களே அவரை (ஸுரேச்வராசார்யாளை)க் கொஞ்சம் ஸந்தேஹக் கண்ணோடு பார்த்ததாக 'சங்கர விஜய'ங்களில் இருக்கிறது. அவர் ஆசார்யாளின் சாரீரக பாஷ்யத்துக்கு★ வார்த்திகம் எழுத ஆரம்பித்ததாகவும், அப்போது மற்ற சிஷ்யாள், 'என்ன இருந்தாலும் இவர் ரொம்பவும் தீவ்ரமான பூர்வ மீமாம்ஸகராக இருந்தவர்தானே? வாதத்தில் தோற்றுப் போனதால் வழியில்லாமல் ஆசார்யாளிடம் சிஷ்யராகி விட்டாலும், அந்தரங்க பூர்வமாக அத்வைத வேதாந்தத்தில் இவருக்கு ஈடுபாடு இருக்குமோ, இருக்காதோ? நம்மையெல்லாம் மாதிரி ப்ரஹ்மசர்யத்திலிருந்தே ஸன்னியாஸத்திற்கு வராமல் பஹுகாலம் குடும்ப வாழ்க்கையிலிருந்த இவருக்குள் ஞான தத்வம் ஏறியிருக்குமா? அதனாலே honest-ஆக எழுதாமல், தன்னுடைய பழைய ஸித்தாந்தத்துக்கே இடம் கொடுக்கும்படி ஏதாவது 'ட்விஸ்ட்', 'கிஸ்ட்' பண்ணி எழுதிவிடப்போகிறாரே!' என்று ஆசார்யாளிடம் சொன்னார்களாம், ஆசார்யாள் மனஸில் ஒன்றை நினைத்துக் கொண்டு, ஆனால், சும்மாயிருந்துவிட்டார். ஸுரேச்வராசார்யாள் காதுக்கே விஷயம் எட்டி அவர் 'நாம் எழுத வேண்டாம்' என்று இருந்துவிட்டார்.

அப்புறம் ஒரு நாள் அவர் ஆசார்யாளிடம் வந்து, 'தங்களுக்குக் குருதக்ஷிணை தரணும், தரணும் என்று இருந்தது. தாங்களோ பணத்தைத் தொடாதவர். என்ன தருவது, தருவது என்று இருந்தது. அப்புறம் என்னவோ யோசித்து, ஏதோ ஒன்று கொண்டு வந்திருக்கிறேன். இதுதான்!' என்று சொல்லி ஒரு சுவடிக் கட்டை ஆசார்யாள் பாதத்தில் வைத்து நமஸ்காரம் பண்ணினார்.

அது நைஷ்கர்ம்ய ஸித்தி என்ற புஸ்தகம். பரம கர்மானுஷ்டாதாவாக இருந்தவர், 'எல்லாக் கார்யமும் போய் சும்மாயிருப்பதுதான் மஹாஸித்தி.

---

★ ப்ரஹ்ம ஸூத்ரத்துக்கு 'சாரீரக மீமாம்ஸா' என்றும் பெயராதலால் ஆசார்யாளின் ஸூத்ர பாஷ்யம் 'சாரீரக பாஷ்யம்' என்றும் கூறப்படும். சரீரத்திலிருந்து பிரித்து அதற்கு உட்பொருளான ஆத்மாவைச் சொல்வதால் 'சாரீரகம்'.

அதுதான் மோக்ஷம். அதுதான் வேத வேதாந்த முடிவு' என்று விவரித்து எழுதியிருந்த புஸ்தகம்!

ஆசார்யாளின் மனஸில் நினைத்ததுதான் ஸுரேச்வரருக்குள் புகுந்து, மற்ற சிஷ்யர்கள் அவருடைய honesty-ஐத் தெரிந்துகொள்ளும்படியாக இப்படி எழுதப் பண்ணினது!

ஆனாலும் அவர் எடுத்தவுடனேயே தடை ஏற்பட்டதால் அப்புறமும் சாரீரக வார்த்திகம் எழுதவேயில்லை. ஆசார்யாளும், மற்ற சிஷ்யர்களும் ஆசைப்பட்ட தன் பேரில் (ஆசார்யாளின்) உபநிஷத் பாஷ்யங்களில் இரண்டிற்கு மாத்ரம் வார்த்திகம் எழுதினார். ஒன்று தக்ஷிணத்தில் பெருவாரியாக வழக்கிலுள்ள க்ருஷ்ண யஜுர்வேதத்தைச் சேர்ந்த தைத்திரீயம்; இன்னொன்று வடக்கே ரொம்ப அனுஷ்டானத்திலுள்ள சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்த ப்ருஹதாரண்யகம். (ஆசார்யாளின்) தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரத்திற்கும் அவர் உரை எழுதியிருக்கிறார் – மான ஸோல்லாஸம் என்று பேர்.

அடுத்த புத்தகத்தில்...

ஸ்ரீ சங்கர சரிதம் என்கிற தலைப்பின்கீழ் எஞ்சியிருக்கும் கட்டுரைகள் இடம்பெறுகின்றன. அத்துடன் அருள் உரை நிறைவு பெறும்.

